யான விராடராஜன் ஸந்தோஷமடைந்து [1]பார்த்தனுடைய புத்ரனை அந்த அபிமன்யுவின்பொருட்டு அப்பொழுது ஏராளமான தனத்தையும் காற்றுப்போன்ற வேகமுள்ள லக்ஷங்குதிரைகளையும் முக்யமான இருநூறுயானைகளையும் பலவிதமான பொருள்களையும் ஸந்தோஷத்துடன் சிறந்தவரிசையாகக் கொடுத்தான். மத்ஸ்யராஜன் குந்திபுத்ரர்களின்பொருட்டுக் காணிக்கையையும் கொடுத்தான். குந்திபுத்ரர் க்ருஷ்ணனோடு ஏராளமான (பொருள்களைப்) பெற்றுக்கொண்டார். தர்மபுத்ரரான அவர், அப்பொழுது விவாஹமானவுடன் ஸ்ரீக்ருஷ்ணன்கொண்டுவந்த தனத்தையும் ஆயிரம்பசுக்களையும் வஸ்த்ரங்களையும் பற்பலவிதமான ரத்னங்களையும் எல்லாப்பூஷணங்களையும் வாஹனங்களையும் படுக்கைகளையும் ப்ராம்மணர்களுக்குக் கொடுத்தார். அவர் நகரவாஸிகளான ஜனங்களை ப்ரீதியடையக்கூடிய சிறந்தபொருள்களால் த்ருப்தியடையச்செய்தார். ஓ! பரதச்ரேஷ்டரே! (எல்லா) மஹோத்ஸவங்களுக்கும் உபமானமாயிருக்கின்ற அந்தமத்ஸ்யராஜனுடைய நகரமானது ஸந்தோஷமுள்ளவர்களும் புஷ்டியுள்ளவர்களுமான ஜனங்களால் நிறைந்துவிளங்கியது. நிறைந்த செல்வமுள்ள விராடராஜன், தன்புத்ரியான அந்த உத்தரையை ஸுபத்ராபுத்ரனை அபிமன்யுவுக்குக்கொடுத்து, புரோஹிதர்களோடும் மந்த்ரிகளோடும் பட்டணத்துஜனங்களோடும் தேசவாஸிகளான ஜனங்களுடனும், அப்பொழுது பரமானந்தத்தை அனுபவித்தான்" என்றுகூறினர்.

ஜனமேஜயர், "(வைசம்பாயனரே!) விவாஹம்நிறைவேறியவுடன் ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவரான யுதிஷ்டிரர் என்ன சொன்னாரென்பதையும் பார்த்தர்கள் அதற்குமேல் என்னசெய்தார்களென்பதையும் முழுதும் (எனக்கு) இப்பொழுது உரைப்பீராக" என்றுவினவினர்.

வைவாஹிகபர்வம் முற்றிற்று.

---

## விராடபர்வம் முற்றிற்று.

---

[1] மூலத்தில், 'பார்த்தாய' என்றிருக்கிறது.